போகிறவனுக்கு முதல் வகுப்பில் தேறியிருந்தால் 7000 ரூபா
யும், இரண்டாம் வகுப்பானால் 5000 ரூபாயும், மூன்றாம்
வகுப்பானால் 3000 ரூபாயும் கொடுக்கிறோம்.

முதல் வகுப்பில் தேறியவனுக்கு 'பாஷ்ய ரத்ன' என்றும்,
இரண்டாவதில் தேறியவனுக்கு 'பாஷ்ய மணி' என்றும்,
மூன்றாவதில் தேறியவனுக்கு 'பாஷ்யக்ஞ' என்றும் பட்டம்
கொடுக்கிறோம்.

இவை தவிரப் பாரம்பரிய நியமாத்யயனத் திட்டம்
என்றும் ஒன்று வைத்திருக்கிறோம். அது என்னவென்றால்,
குருகுலவாஸம் என்பது சில தலைமுறைகளுக்கு முன்னேயே
பல இடங்களில் மாறி ஒரு பிரம்மசாரியானவன் வேறே
குருவைத் தேடிப் போய் அவரோடு வாஸம் பண்ணாமல் தன்
தகப்பனாரிடமிருந்தே படிக்கிற முறையாக ஆகி இருக்கிறது.
இப்படி அனேகக் குடும்பங்களில் தகப்பனார்-பிள்ளை
என்பதே குரு-சிஷ்யக் கிரமமாக அமைந்து சில தலைமுறை
களாக வேத வித்யை இவ்விதத்தில் தொடர்ந்து வந்திருக்கிறது.
தற்போதும் அபூர்வமாக இப்படி வீட்டிலேயே பிதா-புத்ரன்
என்று படித்து வருகிறவர்களை உத்ஸாஹப்படுத்தி விருத்தி
செய்ய வேண்டும்; நல்ல வேத சாஸ்திர ஞானம் உள்ள ஒரு
பிராமணர், தன் பிள்ளைக்கும் அதைக் கற்றுக் கொடுக்கும்படி
யாக ஊக்குவிக்க வேண்டும் என்பதற்காகவே நியமாத்யயனத்
திட்டம் போட்டிருக்கிறோம். இதன்கீழ் ஒவ்வொரு வித்யார்த்தி
யும் திட்டத்தில் சேர்கிறபோதே, அவன் பேரில் 12,500 ரூபாய்
மூலதனம் போட்டு விடுகிறோம். அதன் வட்டியிலிருந்து அவ
னுடைய படிப்புக் காலம் முழுவதும் மாஸா மாஸம் 40 ரூபாய்
ஸ்டைஃபண்டும் படிப்பைப் பூர்த்தி பண்ணுகிறபோது
'லம்ப்'பாக 9000 ரூபாயும் கொடுக்கிறோம். அதோடுகூட,
முதலில் இவன் பேரில் போட்ட 12,500 ரூபாய் மூலதனத்தின்
வட்டியிலும் 80% இவனுக்கு ஆயுஸ் உள்ளவரையில் கிடைத்து
வரும்.



# வேத பாஷ்யம்

அர்த்தம் தெரியாமலே வேதத்தை அத்யயனம் பண்ணி அந்தச் சப்தத்தை ரக்ஷித்து வந்தாலும் போதும், மந்திர சக்தி வாய்ந்த அந்தச் சப்தமே க்ஷேமத்தைக் கொடுத்துவிடும்; அர்த்தம் தெரியாமலும், ஒரு நம்பிக்கையின் பேரில் வேதாத்ய யனம் பண்ணுவதுதான் வீர்யவத்தரம் – என்றெல்லாம் நடுநடுவே சொல்லியிருக்கிறேன். அதனால் அதுதான் என் பூர்ணமான அபிப்பிராயம் என்று அர்த்தமில்லை! வேதத்துக்கு அர்த்தம் தெரிந்து கொள்வதென்றால் அதற்கு ஏகப்பட்ட காலம் படிக்க வேண்டியிருக்கிறது. அத்யயனத்துக்கு அப்புற மும் இத்தனை வருஷம் ஒருவனைப் பாடசாலையில் கட்டிப் போடுவது என்றால் சிரமம்தான். அதனால்தான் அர்த்தம் தெரிந்து கொண்டுதான் வேதாத்யயனத்தை ரக்ஷிக்க வேண்டும் என்றால் ரொம்பப் பெரிசாக எதிர்பார்த்து அடியோடு ஒன்றுமே நடக்காமல் போய்விடப் போகிறதே, அத்யயனத்துக் குக்கூட யாரும் வராமலே போய்விடப் போகிறார்களே என்று நினைத்து பாதி ஸீரியஸாகவும், பாதி விளையாட்டாகவும், 'அர்த்தமே வேண்டாம்; (வேத) சப்தமே போதும்' என்று சொல்லி வந்தேன்.

வாஸ்தவத்தில், சப்தத்தை மட்டும் ரக்ஷித்துத் தருகிறவர் களாவது நிறைய இருக்க வேண்டும்; அதோடுகூட வேத மந்திரங்களுக்கு அர்த்தத்தையும் தெரிந்து கொண்ட சிலராவது இருக்கும்படியாகவும் பண்ணத்தான் வேண்டும். இதனால்தான் வேதபாஷ்யத்தில் ரொம்பவும் அக்கறை எடுத்துக் கொண்டிருக் கிறோம்.

வேதத்துக்கு விசேஷமான அர்த்த கௌரவம் இருப்பதால் தான் அனேக மஹான்கள் அவற்றுக்குப் பாஷ்யம் என்கிற பேரில் விரிவாக அர்த்தம் (உரை) எழுதியிருக்கிறார்கள்.

அவை வீணாகப் போக விடலாமா?

நாம் நம் அகங்களில் விவாஹம் முதலான பல காரியங்கள், சிரார்த்தம் முதலான பித்ரு காரியங்கள், இன்னும் சில ஹோமங்கள், ஆவணியவிட்டம் (உபாகர்மம்) முதலான வைதிக காரியங்கள் என்று பலவற்றைப் பண்ணுகிறோம். இவற்றின்போது வாத்தியார் சொல்லிக் கொடுக்கிற மாதிரி அனேக வேத மந்திரங்களைச் சொல்கிறோம். அடியோடு இந்தக் கர்மாக்களை விட்டுவிடுகிற துர்பாக்கிய ஸ்திதி ஈச்வரா னுக்ரஹத்தில் இதுவரை ஏற்படவில்லை. ஆனாலும் முன்னைக்கு இப்போது தினந்தினமும் கர்மாக்கள் க்ஷீணித்துக் கொண்டுதான் வருகின்றன. இதற்கு ஒரு முக்யமான காரணம், சொல்கிற மந்திரங்களுக்கு அர்த்தம் தெரியாததுதான். அர்த்தம் தெரியாமலே, வாத்தியார் சொன்னதை ஒப்பிக்கிறது என்றால் இந்தக் காலத்தில் படிப்பாளிகளாக இருக்கப்பட்ட நாகரிகக் காரர்களுக்கு அதிலே ஈடுபாடு இருப்பதில்லை. அர்த்தம் தெரியாவிட்டாலும், சிரேயஸ் என்று நம்பிக்கையோடு சொல் கிற சிரத்தையை இந்தக் காலத்தில் எதிர்பார்க்க முடியாது. வாஸ்தவத்திலும், ஒவ்வொரு சடங்குக்கும் வெவ்வேறு மந்திரம் இருப்பதாலேயே அததற்கும் பொருத்தமான அர்த்தத்தோடு தான் அவை இருக்கின்றன என்று ஆகிறது. அந்தத் தாத்பரியத் தைத் தெரிந்து கொண்டால், அவற்றில் பலவற்றுக்கு scientific basis (விஞ்ஞானபூர்வமான ஆதாரம்) இருப்பதாகத் தெரி கிறது; இன்னும் பல மந்திரங்களுக்கு emotional appeal (உணர்ச்சி பூர்வமான கவர்ச்சி) இருப்பது அவற்றுக்கு அர்த்தம் தெரிகிற போதுதான் வெளியாகிறது. இப்படி அர்த்தம் தெரிந்தால் ஈடுபாடு உண்டாகிறது. இதனால்தான் ஈடுபாடே இல்லாமல் மொண மொண என்று எதையாவது சொல்வதைத் 'திவச மந்திரம்' என்றே சொல்கிற வழக்கம் வந்துவிட்டது! ஆகை யால், இனிமேலாவது திவஸ மந்திரம் உள்பட எல்லாவற்றுக் கும் அர்த்தம் தெரியும்படியாகப் பண்ண வேண்டும்!

எப்படிப் பண்ணுவது? முதலில் வாத்தியாருக்கு அர்த்தம் தெரிய வேண்டும். இப்போது பெரும்பாலான வாத்தியார் களுக்கே அர்த்தம் தெரியவில்லை. ஒரு கர்த்தா அல்லது யஜமா னன் 'பண்ணி வைக்கிற' வாத்தியாரை, 'இதன் அர்த்தம்

என்ன?' என்று கேட்டால் அவருக்குச் சொல்லத் தெரிய வில்லை. இப்படியிருந்தால், பண்ணுகிறவனுக்கு சிரத்தை எப்ப டிக் குறையாமல் இருக்கும்?

இன்றைக்கு உள்ள பல நடுத்தர வயசுக்காரர்களுக்கு, 'நாம் சொல்லும் மந்திரங்களுக்கு அர்த்தம் என்ன?' என்று தெரிந்து கொள்கிற ஆர்வம் இருக்கிறது என்பதே என்னுடைய நம்பிக்கை. அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளாமல், வெறும் சப்தத்தைக் கிளிப்பிள்ளை மாதிரி ஒப்பிக்கிறது என்பதாலேயே அவர்களுக்குக் கர்மாவில் சிரத்தை குறைகிறது என்பது என் அபிப்பிராயம். ஆதலினால் வைதிக வ்ருத்தியை (உபாத்தியா யத் தொழிலை) மேற்கொள்ள இருக்கிறவர்களுக்கு வேத பாஷ் யத்திலும் நல்ல ஞானத்தை ஏற்படுத்தி, அவர்களை அர்த்தம் சொல்லும்படியாகப் பண்ண வேண்டும் என்று பிரயாஸை எடுத்திருக்கிறோம்.

அர்த்தம் தெரியாமல் வேதம் சொல்கிற பிராமணனை (வேதத்தின் ஆறு அங்கங்களில் ஒன்றான) நிருக்தத்திலேயே சபித்திருக்கிறது.

நமக்கெல்லாம் அர்த்தம் தெரிய வேண்டும், கர்மாக்களில் சிரத்தை ஏற்பட வேண்டும் என்பதற்காகவேதான், அனேகம் பெரியவர்கள் வேதங்களுக்குப் பாஷ்யங்களை எழுதி வைத் திருக்கிறார்கள்.

ஸ்ரீ மத்வாசாரியார்கூட ரிக்வேத முதல் காண்டத்தின் முதல் நாற்பது ஸூக்தங்களுக்குப் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். ஸ்கந்த ஸ்வாமி என்பவரும் ரிக்வேத பாஷ்யம் செய்திருக் கிறார். கிருஷ்ண யஜுர் வேதத்துக்கு பட்டபாஸ்கரரின் பாஷ்யம் இருக்கிறது. சுக்ல யஜுஸுக்கு மஹீதரரின் பாஷ்யம் இருக்கிறது. சமீபகாலத்தில்கூட தயானந்த சரஸ்வதி, அரவிந்த கோஷ், அரவிந்த கோஷின் வழியை அனுசரித்து கபாலி சாஸ்திரி என்று பல பேர் வேத பாஷ்யம் செய்திருக்கிறார்கள்.

இப்படிப் பல இருந்தாலும் ஸ்ரீ ஸாயணாசாரியாள் பண்ணின வேதபாஷ்யந்தான் வெள்ளைக்காரர்கள் முதற் கொண்டு authoritative (அதிகாரபூர்வமானது) என்று ஒப்புக் கொள்ளும்படியாக விசேஷமாகப் பிரகாசித்து வருகிறது.

பதினாலாம் நூற்றாண்டிலே தோன்றி விஜயநகர சாம்ராஜ்ய ஸ்தாபனம் பண்ணி, ஆதிசங்கர பகவத் பாதாளின் மடங் களைப் புது ஜீவனோடு புனருத்தாரணம் பண்ணின மஹா புருஷரான ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள்தான் இந்த ஸாயனா சார்யர்கள். ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்கிற நாலில் யஜுஸிலேயே கிருஷ்ண யஜுஸ், சுக்ல யஜுஸ் என்று இரண் டும் இருப்பதால் மொத்தம் ஐந்து வேதம் ஆகிறது. இந்த ஐந்து வேதங்களுக்கும் ஸாயணர் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். அவருக்கு முன்னாலும் பலர் வேத பாஷ்யம் பண்ணியிருந்தா லும், இப்படி ஐந்து வேதங்களுக்கும் பண்ணினவர் அவர் ஒருத்தரே. இதோடு பூர்வ மீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை முதலான சாஸ்திரங்களிலும் பல க்ரந்தங்களை இயற்றியிருக் கிறார். ஒரு ஸாம்ராஜ்யத்தில் மந்திரி மாதிரி நிர்வாகப் பொறுப்பு வகித்துக் கொண்டே இத்தனை அத்யாத்ம நூல் களையும் ஒருத்தர் பண்ணினார் என்று நினைத்தாலே ஆச்சரிய மாயிருக்கிறது!

அவர் பண்ணின வேத பாஷ்யந்தான் ஆரம்பத்திலிருந்து வெகுவாகப் பிரசாரத்தில் இருந்தது. இனிமேல் அது போய் விடுமோ என்று பெரிய விசாரம் உண்டாயிற்று. வேத அத்ய யனம் செய்தவர்களானால், மேலே பாஷ்யம் படித்து அர்த்தம் தெரிந்து கொள்ளாமலே உபாத்யாய விருத்திக்குப் போய் விடுவதாகவும், காவியங்களை (சாஸ்திரங்களையும்கூடத்தான்) வாசிப்பவர்களோ அத்யயனம்கூடப் பண்ணாமல் நின்று விடுவதாகவும் ஆகி வந்ததால், வேதபாஷ்யம் வரவர ரொம்ப மங்கிக் கொண்டு வந்தது. அந்தச் சமயத்தில்தான் முன்னே சொன்னபடி இதை ரக்ஷிப்பதற்காக ஷஷ்டியப்த பூர்த்தி டிரஸ்ட் ஏற்படுத்தப்பட்டது.

முதலில் இந்த டிரஸ்ட்டின் ஆதரவில் பரீக்ஷைகள் ஆரம்பிக் கிறபோது, வேத பாஷ்யம் என்பது பிரசாரத்தில் இல்லாமல் புஸ்தகத்தில் மட்டுந்தான் இருந்தது. புஸ்தகத்தை வாங்க ஆளே இல்லையே என்று பிரசுரித்தவர்கள் கவலைப்பட்டுக் கொண் டிருந்த சமயம் அது. இந்த டிரஸ்ட் ஏற்பட்டபின் நாங்களே பாஷ்யம் படிப்பவர்களுக்கு உபகாரச் சம்பளம், ஸம்மானம் இவற்றோடு புஸ்தகமும் வாங்கிக் கொடுத்து விடுவதால்,

நீண்டகாலமாக விலை போகாத புஸ்தகங்கள் எல்லாம் விற்பனை ஆயின. பிரஸ்களில் பாஷ்ய புஸ்தகம் ஸ்டாக் இல்லாமல், இனிமேல் வாசிப்பவர்களுக்குப் புஸ்தகத்துக்கு என்னடா செய்வது என்று நாங்கள் கவலைப்படும்படியாக நிலைமை மாறிற்று! பராசக்தியின் அனுக்ரஹத்தால்தான் இப்படி ஆயிற்று. அந்த அனுக்ரஹ பலம் இருக்கிறவரை புஸ்தகம் இல்லாததால் பாஷ்யம் படிப்பது நின்றுபோச்சு என்ற ஸ்திதி ஒரு நாளும் ஏற்படாது. இப்போது இருப்பதும் போதாது. இன்னும் நிறையப் பேர் வேதபாஷ்யம் படிக்க வர வேண்டும்.

நாம் ஒரு விவாஹம் செய்கிறோம், உபநயனம் செய்கிறோம், ஸீமந்தம் செய்கிறோம் என்றால், அதற்கு இரண்டு நாட்கள் முந்தி பாஷ்யக்ஞரான வேத பண்டிதரை வரவழைத்து, அதிலே பிரயோகமாகிற மந்திரங்களுக்கு என்ன அர்த்தம், சடங்குகளுக்கு என்ன தாத்பரியம் என்று கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். கர்மாவைப் பண்ணுகிறபோதே கேட்டுத் தெரிந்து கொள்வதென்றால் பொழுது இருக்காது. முன்னாடியே தெரிந்து கொண்டதால்தான் மனஸிலும் ஊறும்; கர்மா பண்ணுகிறபோது அதில் மனஸாறப் பிடிப்பும் இருக்கும்.

இப்போது நடக்கும் கல்யாணங்களில் ஒரு மாஸத்துக்கு முன்கூட அவகாசம் இருப்பதில்லை. யார் Band வைக்கலாம், யார் டான்ஸ் வைக்கலாம், எப்படி ஊர்வலம் விடலாம் என்று ஏற்பாடு பண்ணுவதற்கே காலம் போதமாட்டேன் என்கிறது! எதுதான் இத்தனைக்கும் உயிர்நிலையோ, எதை வைத்துத்தான் கல்யாணமோ, அந்த மந்திரங்களையும், அவற்றைச் சொல்லி நடத்தி வைக்கும் வைதிகர்களையுந்தான் கடைசிப் பக்ஷமாக வைத்திருக்கிறோம்! யாருக்காவது சிரத்தை ஏற்பட்டு, அவகாசமும் கிடைத்து, தான் செய்ய வேண்டிய கர்மாக்களின் மந்த்ரார்த்தங்களைத் தெரிந்து கொள்ளப் பிரியப்பட்டால், அதைச் சொல்லி விளக்குவதற்குச் சிலரையாவது தயார்ப் படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில்தான் வேதபாஷ்யம் சொல்லிக் கொடுத்து பரீக்ஷைகள் நடத்துகிறோம்.

விவாஹம், உபநயனம் என்று ஒரு கர்மாவின் பெயரைச்

சொல்லிப் பத்திரிகை போட்டு அதற்காக ஊர் கூட்டி, பந்துக்களை வரவழைத்து, ஆயிரக்கணக்கில் செலவும் செய்கிறோம். ஆனால், அந்தக் கர்மாவுக்கு உரிய கவனத்தைச் செலுத்துவதில்லை. அதன் அர்த்தம் என்ன, தாத்பரியம் என்ன என்பதையே தெரிந்து கொள்ள முயலுவதில்லை என்றால் அது சரியேயில்லை!

அர்த்தம் தெரிந்து செய்தால்தான் பலன் ஜாஸ்தி என்று சொல்லியிருக்கிறது. கர்மாவை விட்டுவிடுகிற துணிச்சல் வராமல் இன்னமும் பண்ணிக் கொண்டிருக்கிறவர்கள், அர்த்தத்துக்கான முக்கியத்துவத்தைக் கொடுக்கத்தான் வேண்டும். கர்மாவை விட்டுவிட்டால் தப்பு என்று ஏதோ ஒரு பயம் இருப்பதால்தானே இன்னமும் செய்து வருகிறோம்? அதே மாதிரி, இதற்கு அர்த்தம் தெரியாமல் செய்தாலும் தப்பு என்ற பயம் ஏற்பட்டு, பண்டிதர் மூலமாக அதைத் தெரிந்து கொள்ள வேண்டும். கர்மாவைச் செய்கிறவர்கள் அர்த்தம் தெரிந்து செய்தாலே அதன் பலனுக்குள்ள வீரியமும் ஜாஸ்தியாகிறது. **யதேவ வித்யயா கரோதி... ததேவ வீர்யவத்தரம் பவதி** என்று (சாந்தோக்ய உபநிஷத்தில் 1.10) சொல்லியிருப்பதை நம்ப வேண்டும்.

கர்த்தாவாக ஒருவன்தான் இந்த மந்திரத்தைச் சொல்லிக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறான் அல்லது பூணூல் போட்டுக் கொள்கிறான். பாக்கி வந்திருக்கிறவர்கள் விருந்து, பேச்சுக் கச்சேரி, டான்ஸ் கச்சேரி, மேளம் என்று இவற்றிலேயே சந்தோஷப்பட்டுவிட்டுப் போய்விடலாமா? கூடாது. நம் எல்லாருடைய உயர்ந்த மரியாதைக்கும் உரிய வேத மந்திரங்கள் சொல்லப்படும்போது அதைக் கவனித்துக் கௌரவம் செய்ய வேண்டும். அதுவே மற்றவர்களுக்கும் சிரேயஸைத் தரும். மற்றவர்களும் அர்த்தத்தைத் தெரிந்து கொண்டு கேட்டால், கர்த்தாவாக இல்லாமல் வெறுமே கேட்டால்கூட அவர்களுக்கும் புண்ணியம் ஏற்படும்.

அச்வமேத யாகம் என்று ஒன்று இருக்கிறதல்லவா? அதைக் கர்த்தாவாக, யஜமானனாக இருந்து கொண்டு செய்கிற யோக்கியதையும் அதிகாரமும் எல்லா ராஜாக்களையும் ஜயித்து அடக்கிய ஸார்வபௌமனான ஒரே ஒரு மஹாராஜாவுக்குத்

தான் உண்டு. இதனால் எந்த ஒரு காலத்தை எடுத்துக் கொண் டாலும், அப்போது லோகம் பூராவிலும் ஒரு ராஜாதான் இந்த யாகம் செய்யக் கூடிய அதிகாரியாகிறான். இந்த அச்வமேத யாகத்துக்கோ, வேறெந்தக் கர்மாவுக்கும் இல்லாத அளவுக்கு ஏராளமான புண்ய பலன்களைச் சொல்லியிருக்கிறது. 'ஒரு தலைமுறையை எடுத்துக் கொண்டால், லோகம் முழுவதிலும் ஒருத்தனுக்குத்தான் இத்தனை புண்ணியமும் சேரும்படி இருக் கிறது! வேதத்தில் இப்படி ரொம்பவும் பக்ஷபாதம் செய்து மற்ற அத்தனை பேருக்கும் இந்தப் புண்ணியம் இல்லாமல் செய்திருக்கிறதே! இத்தனை பலம், படை வசதி, திரவிய வசதி இருக்கிறவனுக்குத்தான் உயர்ந்த புண்யங்கள் அத்தனையும் (கிடைக்கும்) என்றால், அவனைவிட நல்ல சீலங்களோடு இருக் கிற மற்றவர்களுக்கு வஞ்சனை செய்த மாதிரியல்லவா இருக் கிறது? வேதம் எங்கேயாவது இப்படிச் செய்யுமா?' என்று தோன்றுகிறது.

வாஸ்தவத்தில் வேதம் இப்படிப் பக்ஷபாதம் பண்ணவே இல்லை. வேதகர்மா ஒன்று பண்ணினால், கர்த்தாவுக்கு விசேஷ பலன் உண்டாகிறபோதே லோகம் முழுவதற்கும் அது நல்லதைப் பண்ணத்தான் செய்யும். இங்கே இருட்டாக இருக் கிறது என்று நான் ஒரு லைட் போட்டுக் கொண்டால் அது எனக்கு மட்டுமா வெளிச்சம் கொடுக்கிறது? இன்னும் பத்துப் பேருக்கும் கொடுக்கிறதோ இல்லையோ?

கர்த்தாவுக்கு விசேஷமான பலன், மற்றவர்களைவிடக் கூடுதலான பலன் என்று வேண்டுமானால் சொல்லலாம். மற்ற வர்கள்கூட அவன் மாதிரிக் கூடுதலான பலனை – அவனுக்குச் சமமான பெரிய பலனை பெறுவதற்கு ஒரு வழியும் சாஸ்திரத் தில் சொல்லியிருக்கிறது; வேதத்திலேயே சொல்லியிருக்கிறது. ஒரு ராஜா அச்வமேதம் பண்ணுகிறான் என்றால், மற்றவர்கள் அப்படிச் செய்ய முடியா விட்டாலும், எப்படிச் செய்வது என்ற கிரமத்தைத் தெரிந்து கொள்ளலாம் அல்லவா? அந்த மந்திரங்களைத் தாங்களும் கவனிக்கலாமல்லவா? அர்த்தத் தைத் தெரிந்து கொள்ளலாமல்லவா? இப்படியெல்லாம் செய்துவிட்டால் மற்றவர்களுக்கும் யாகம் செய்த பூர்ண பலனே உண்டாகி விடுகிறதாம். இப்படி வேதத்தில் அச்வமேத

பிரகரணத்திலேயே சொல்லியிருக்கிறது.

இதே ரீதியில் கல்யாணமாகட்டும், அபர காரியமாகட்டும் (ஈமச்சடங்காகட்டும்) எதிலும் கலந்து கொள்கிறவர்களும் அர்த்த ஞானத்தோடு மந்திரங்களைக் கவனித்து வந்தாலே, அவர்களுக்கும் மகத்தான புண்ணியம் உண்டாகும்!



## என் கடமை

வேதத்தை ரக்ஷிக்க வேண்டியதுதான் உங்களுடைய பெரிய கடமை என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பது தான் என் கடமை. நீங்கள் நான் சொல்வதைக் கேட்டாலும் கேட்காவிட்டாலும், உங்களைக் காரியம் பண்ணும்படிச் செய்ய எனக்குச் சக்தியில்லா விட்டாலும், 'இதுதான் உங்கள் காரியம்; இதுதான் உங்கள் கடமை' என்று வாய் வார்த்தை யாகச் சொல்லவாவது எனக்குச் சக்தி இருக்கிற மட்டும் ஓயாமல் ஒழியாமல், நச்சுநச்சென்று, இதை நான் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டியதுதான். வேதத்துக்காகத்தான் ஆசார்யாள் இந்த மடத்தை ஏற்படுத்தியிருக்கிறார். அவர் பெயரை வைத்துக் கொண்டு உங்களைப் பாக்கி எப்படியெல் லாம் நான் ஏமாற்றினாலும் இந்த வேதங்களைக் காப்பாற்றிக் கொடுக்கும்படியான பொறுப்பையாவது 'ஸின்ஸிய'ராகப் பண்ணி விட்டால், அது ஓரளவு தோஷ நிவிருத்தியாகும். இதையும் பண்ணாவிட்டால் மஹாப்பெரிய தோஷமாகிவிடும். அதனால்தான் அலுப்புத் தட்டினாலும் சரி என்று திரும்பத் திரும்ப வேத ரக்ஷணத்தைச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்!

வெறுமே சொல்வதோடு இல்லாமல், மேலே சொன்ன மாதிரி ஸ்தூலமாகப் பல திட்டங்களும் போட்டு நடத்தி வருகிறது. இதற்காக உங்களிடம் யாசகம் பண்ணுகிறேன். 'யாசகம்' என்று இல்லாவிட்டால், 'ஆக்ஞை' என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். எப்படியோ

ஓரர்த்தப்படி, என் காரியம் நடந்தாக வேண்டும்!

வேதம் ஓதிய வேதியர்க் கோர் மழை
நீதி மன்னர் நெறியினர்க் கோர் மழை
மாதர் கற்புடை மங்கயர்க் கோர் மழை
மாதம் மூன்று மழை எனப் பெய்யுமே

என்று சொல்லியிருக்கிறது. மாதம் மும்மாரி பெய்தால்தான் எப்போதும் பூமி குளிர்ந்து, பயிர் பச்சை ஸம்ருத்தி (வளம்) இருக்கும். பிராமணர் முறைப்படி வேத அத்யயனம் பண்ணி னால் அதற்காக மாஸம் ஒரு மழையும், ராஜா நீதி தவறாமல் ராஜ்யபாரம் பண்ணினால் அதற்காக ஒன்றும், ஸ்திரீகள் பதிவ்ரதா தர்மம் தப்பாமலிருந்தால் அதற்காக ஒன்றுமாக, இப்படி மும்மாரி பொழிகிறது என்று சொல்லியிருக்கிறது.

இந்த மூன்றில் 'நீதி மன்னர் நெறி' – அதாவது ராஜாங்கத் தார் நீதி தவறாமல் ராஜ்ய பரிபாலனம் பண்ணும் விஷயம் அடியோடு என் கையிலில்லாதது. ஆட்சி விஷயத்தில் (சன்னி யாசிகளான) எங்களுக்குச் சம்பந்தம் இல்லை. ஆனபடியால் இதிலே எனக்குப் பொறுப்பும் இல்லை.

ஆனால் பாக்கி இரண்டிலும், தர்மத்தை ரக்ஷித்துத் தர வேண்டிய ஒரு மடத்தின் சாமியார் என்கிற முறையில், எனக்கு நிரம்பப் பொறுப்பு இருப்பதாகவே நினைத்துக் கொண்டிருக்கி றேன். மாதர் கற்பை மதத் தலைவர் என்ன காப்பாற்றுவது என்றால், இப்போது ஸ்திரீ தர்மத்துக்கு விரோதமான பல போக்குகள் வந்துவிட்டதால் 'குரு' பட்டம் சூட்டிக் கொண்டி ருக்கிற நான்தான் அந்தத் தப்புகளை எடுத்துச் சொல்லிப் பெண்களுடைய நடத்தைக்குக் கெடுதல் வராமல் எச்சரிக்க வேண்டியிருக்கிறது. பால்ய விவாஹ காலத்தில் பெண்கள் தப்பிப் போவதற்கு ரொம்பவும் குறைச்சலாகத்தான் Chance இருந்தது. ஒரு பெண்ணுக்குத் தாம்பத்ய எண்ணம் வருகிற போதே அவளுக்குப் பதி என்று ஒருத்தன் இருந்து விட்டதால், அவனிடம் மட்டுமே அவளுடைய மனஸ் போயிற்று. இந்த எண்ணம் ஏற்பட்ட வயசுக்கப்புறமும் கல்யாணமாகாமல் இருப் பது என்று ஏற்பட்டால், அப்போது மனஸ் பல தினுசாகப் போகிறது. சித்த விகாரம் ஏற்படுகிறது. ஆனால், இப்படிச்

சாரதா சட்டத்திலிருந்து ராஜாங்க ரீதியாகவே ஏற்பட்டுவிட்ட
தால், எங்கள் கையைக் கட்டிப் போட்டுவிட்ட மாதிரித்தான்
ஆகிவிட்டது. ஆனாலும் நினைத்து நினைத்து எத்தனையோ
சட்டங்களை மாற்றுகிற மாதிரி, இதையும் மாற்றுவதற்கு
அவர்களை (சர்க்காரை)த் தூண்டிவிடுகிற ரீதியில் Public
Opinion-ஐ Create பண்ண (வெகுஜன அபிப்ராயத்தை
உண்டுபண்ண) முடியுமா என்பதால்தான், இந்த விஷயத்தில்
நான் முழுக்கக் கை கழுவாமல் எடுத்துச் சொல்லிக் கொண்டி
ருக்கிறேன். ஆனால் பெண்களுடைய மனோபாவம்,
பெண்ணைப் பெற்றவர்களுடைய மனோபாவம் எல்லாமே
இப்போது விபரீதமாக மாறி, கல்யாணத்துக்கு முயற்சி
பண்ணாமல் காலேஜில் கோ-எஜுகேஷன் (Co-education) முறை
யில் (ஆண் மாணவர்களோடு கூட்டுப் படிப்பு) படிப்பது,
அப்புறம் புருஷர்களோடு உத்யோகம் பண்ணுவது என்றெல்
லாம் ஆகி வருவதைப் பார்க்கிறபோது, உள்ளுக்குள்ளே ரத்தக்
கண்ணீர் விட்டுக் கொள்வதைத் தவிர, ஏதாவது பண்ண
முடியுமா என்று நம்பிக்கை போய்க் கொண்டுதான் இருக்கிறது.

எல்லாவற்றுக்கும் முதலில் சொன்னபடி, வேதியர் வேதம்
ஓதுவதற்கானதைப் பண்ணிவிட்டாலே ராஜதண்டம்,
பாதிவ்ரத்ய தர்மம் (கற்பு நெறி) இந்த இரண்டும்கூடத்
தன்னால் சரியாகிவிடும் என்ற நம்பிக்கையில்தான் வேத
ரக்ஷணத்தில் தீவிரமாக முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறேன்.

இதற்கு உங்கள் பசங்களைக் கொடுக்க வேண்டும். பணத்
தையும் கொடுக்க வேண்டும். பணமில்லாத குடும்பத்துப் பசங்
கள் வேத வித்யைக்கு வருவதற்காக, அவர்களுக்குத் தர வேண்
டிய நிதி உதவியானது உங்களில் பணமுள்ளவர்களிடமிருந்து
தான் வர வேண்டும். கற்றுக் கொடுக்கும் வாத்தியார் சம்பளம்,
புஸ்தகச் செலவு, பாடசாலைப் பராமரிப்பு எல்லாவற்றுக்கும்
பணம் வேண்டும். இதற்காக ரொம்பவும் ஸ்வல்ப அளவி
லேயே ஆரம்பித்து காணிக்கைத் திட்டம் வைத்திருக்கிறோம்.
மாசம் ஐந்து ரூபாய்★ செலுத்தினால் போதும். அதற்குப்

★ தற்போதைய சந்தா விவரம் பின்வருமாறு வருட சந்தா ரூ.60/- ஆயுள்
நன்கொடை ரூ.600/- முகவரி: வேதரக்ஷணநிதி டிரஸ்ட், 12, கோவிந்த் தெரு,
தியாகராய நகர், சென்னை-17.

பிரதியாக, நீங்கள் வேதமாதாவுக்குச் செய்கிற கைங்கரியத்தின் புண்ணிய பலனோடுகூட, இங்கே மடத்தில் நடக்கிற சந்திர மௌளீச்வர பூஜாப் பிரசாதம் (விபூதி, குங்குமம், மந்திராக்ஷதை) உங்களுக்குத் தபாலில் அனுப்பப்படும். உங்கள் நக்ஷத்திரத்தைத் தெரிவித்துப் பணம் அனுப்பினீர்களானால், மாதந்தோறும் உங்கள் நக்ஷத்திரத்திலேயே பிரசாதம் அனுப்பப்படும். அதனால் இதற்கு 'நக்ஷத்ரக் காணிக்கை' என்றே பெயர் வைத்திருக்கிறது.

திருப்பதி வேங்கடாசலபதி பேரைச் சொல்லி Chain Letter என்று போடுகிறார்களே... 'இந்த லெட்டரைக் காப்பிப் பண்ணி இத்தனை பேருக்கு அனுப்பா விட்டால் கண் போய்விடும், கால் போய்விடும்' என்று மிரட்டி எழுதுகிறார்களே, வேங்கட ரமண ஸ்வாமியின் பேருக்குப் பயந்து கொண்டு அனேகம் பேர் காப்பி பண்ணி அனுப்புகிறார்களே – அந்த மாதிரி ஏதாவது மிரட்டி உருட்டியாவது இந்த வேதத் தர்மத்துக்கு வசூல் பண்ண முடியுமா என்று எனக்குத் தோன்றுகிறது.

அதிகம் வேண்டாம்! மாசத்துக்குத் தலைக்கு ஐந்து ரூபாய் தான் கேட்கிறேன். பிடிக்கிறதோ, பிடிக்கவில்லையோ சர்க்கார் வரி போட்டுவிட்டால் கொடுக்கிறீர்களா இல்லையா? அப்படி இதை நான் போட்டிருக்கிற வரி என்று வைத்துக் கொள்ளுங்கள். நான் நடத்துகிற கடுகத்தனை சர்க்காருக்குத் தர வேண்டிய வரி இது. இதற்காக பீச்சு, சினிமா இத்யாதியில் துளி குறைத்துக் கொண்டால் போதும். உங்கள் கடமை, என் கடமை இரண்டிலும் ஒரு பங்காவது பூர்த்தியானதாக ஆகும்!



# வேத மஹிமை

**வே**தத்தின் மஹிமை எல்லையில்லாதது. லௌகிகத்தில் அதனுடைய பெருமை ஒருவிதத்தில் புலப்படுகிறது. அதற்கு ஈடும் இல்லை; இணையும் இல்லை என்று காட்டுகிறது. அதைச் சொல்லி முடிக்கிறேன்.

உலகத்தில் உள்ள க்ஷேத்திரங்களுக்குள் காசிதான் அதிக மகிமையுடையது என்று நினைக்கப்படுகிறது. வேறு க்ஷேத்தி ரங்களைப் பற்றி ரொம்பவும் உயர்த்திச் சொல்லும்போது அவை காசிக்குச் சமமானவை என்றே சொல்கிறார்கள். அதனா லேயே காசியினுடைய மகிமை தெரிகிறது. தக்ஷிண தேசத்தி லுள்ள ஒரு ஸ்தலத்தைத் தக்ஷிண காசி என்று சொல்வார்கள். உத்தரகாசி என்று ஹிமாசலத்தில் ஒரு ஸ்தலத்தைச் சொல்கிறார் கள். விருத்த காசி என்று விருத்தாசலத்துக்குப் பெயர். சித்தூர் ஜில்லாவிலுள்ள புக்கே என்னும் ஊரும் ஒரு காசி என்று சொல் லப்படுகிறது. தென்காசி என்றே ஓர் ஊர் திருநெல்வேலி ஜில்லாவில் இருக்கிறது. மற்ற ஸ்தலங்களை 'இது காசி க்ஷேத் திரத்துக்குச் சமமானது' என்கிறார்கள். கும்பகோணத்தைப் பற்றியோ 'இது காசியிலும் வீசம் அதிகம்' என்று சொல்கிறார் கள். கும்பகோணம் ஸ்தலத்தைப் பற்றி ஒரு ஸ்லோகம் உண்டு.

> அந்ய க்ஷேத்ரே க்ருதம் பாபம் புண்ய க்ஷேத்ரே விநச்யதி
> புண்ய க்ஷேத்ரே க்ருதம் பாபம் வாராணஸ்யாம் விநச்யதி
> வாராணஸ்யாம் க்ருதம் பாபம் கும்பகோணே விநச்யதி
> கும்பகோணே க்ருதம் பாபம் கும்பகோணே விநச்யதி

என்பது அந்த ஸ்லோகம். 'சாதாரணமாக ஓர் ஊரில் பண்ணும் பாபம் புண்ணிய க்ஷேத்ரத்துக்குப் போனால் போய்விடும். புண்ணிய க்ஷேத்திரங்களிலேயே பாபம் பண்ணினால்? அந்தப் பாபம் வாரணாசி என்ற காசிக்குப் போனால் போய்விடும்.

காசியிலும் பாபம் செய்தால்? அது கும்பகோணத்துக்குப் போனால் நசித்துவிடும். சரி, அந்தக் கும்பகோணத்திலேயே பாபம் பண்ணிவிட்டால்? அதுவும் கும்பகோணத்திலேயே அழிந்து போய்விடும்' என்று அர்த்தம். காசியைவிடக் கும்பகோணம் அதிக மகிமையுடையது என்பது இதன் கருத்து!

இவ்வாறு காசியைவிட உத்கிருஷ்டமானது, காசிக்குச் சமமானது என்று சொல்வதனாலேயே காசிக்குத்தான் தனி மகிமை இருக்கிறதென்று தெரிகிறது. அதை உபமானமாகச் சொல்லிச் சொல்லி, அதற்கு இன்னும் கௌரவத்தை உண்டாக்கி விடுகிறார்கள். ஒரு பெரியவர் காசி க்ஷேத்திரத்தைப் பற்றி ஒரு ஸ்லோகம் சொல்லியிருக்கிறார். அது க்ஷேத்ராணாம் **உத்தமானாம் அபி யத் உபமயா கா (அ)பி லோகே ப்ரசஸ்தி** என்று ஆரம்பிக்கிறது. 'உத்தம க்ஷேத்திரங்களுக்கும் எதை உபமானமாகச் சொன்னால் பிரசித்தி வருகிறதோ அந்தக் 'காசி' என்று அர்த்தம்.

இதேபோல் எந்தப் புண்ணிய தீர்த்தத்தை உயர்த்திச் சொல்வதானாலும், 'இது கங்கைக்குச் சமானம்' அல்லது 'கங்கையை விடவும் உசத்தி' என்கிற வழக்கம் உள்ளது.

இதனால் க்ஷேத்திரங்களில் பரம உத்தமமானது காசி; தீர்த்தங்களில் பரம உத்தமமானது கங்கை என்றுதானே ஏற்படுகிறது?

**இதைப் போல வேதத்துக்குக் கௌரவம் என்னவெனில், எந்த உயர்ந்த நூலானாலும் 'இது வேதத்துக்குச் சமானம்' என்று சொல்வதுதான்!**

ராமாயணம் மிகவும் பிரசித்தமானது. அந்தக் கதையில் பலவகையானவை இருக்கின்றன. எந்த இந்திய பாஷையிலும் உயர்ந்ததாகவுள்ள நாடகம், கீர்த்தனம், காவியம் எல்லாம் ராம கதையே. யாரை எடுத்தாலும் ராமாயணத்தைப் பற்றிச் சொல்கிறார்கள். அப்படிப்பட்ட ராமாயணத்தின் கௌரவத்தைச் சொல்ல வந்தபோது அது வேதம் என்றே சிறப்பித்துச் சொல்லப்படுகிறது.

**வேத ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மனா**

'ப்ரசேதஸின் புத்ரரான வால்மீகியின் மூலமாக வேதமே ஸாக்ஷாத் ராமாயணமாக உருவெடுத்தது' என்று பொருள்.

மகாபாரதத்துக்கும் வேதம் என்னும் பெயர் சொல்லப்படுகிறது. நாலு வேதங்களுக்குப் பிறகு இதை ஐந்தாவது வேதமாக வைத்து பஞ்சமோ வேத என்று கொண்டாடுகிறார்கள்.

சடகோபர் என்றும் மாறன் என்றும் பெயர் பெற்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழியை வைஷ்ணவர்கள் தலைக்கு மேல் வைத்துக் கொண்டாடுவார்கள். 'வேதம் தமிழ் செய்தான் மாறன் சடகோபன்' என்றே அதையும் சொல்கிறார்கள். அதனால் அதுவும் வேதம் என்றே எண்ணப்படுவது தெரிகிறது.

தமிழில் மிகவும் பிரசித்தமான நீதி சாஸ்திரமாகிய குறளும் கூடத் தமிழ் வேதம் என்றுதானே சொல்லப்படுகிறது?

திருவள்ளுவர் அந்தத் திருக்குறளைச் செய்தார். அந்தக் காலத்தில் மதுரையில் கடைச்சங்கம் இருந்தது. அங்கே சுந்தரேச்வரரால் கொடுக்கப்பட்ட பலகை ஒன்று இருந்தது. அதன் மேல் யோக்கியதை இருந்தவர் உட்காரலாம். யோக்கியதை இல்லா விட்டால் தள்ளிவிடும். அது எப்படி? இதை நம்மால் நம்ப முடியவில்லை. ஆனால், ஒரு மெஷினில் காசு போட்டால் அது டிக்கெட்டை வெளியே தள்ளுகிறது என்பதை நம்புகிறோம்!

திருவள்ளுவர் தாம் செய்த குறளை எடுத்துக் கொண்டு அந்தச் சங்கத்துக்குப் போனார்.

பொதுவாக வித்வான்கள் மற்றவர்களை அலக்ஷ்யம் பண்ணுவார்கள். ஏகமாகப் பரீக்ஷைகள் வைப்பார்கள். அப்படிப் பண்ணுவதனால், அசடாயிருப்பவர்கள் 'நானும் படித்தவன்' என்று சொல்லிக் கொள்ள முடியாது. கெட்ட சரக்கை எழுதிப் பிரசாரம் பண்ண முடியாது. ஆகையால் அப்படிப் பண்ணுவது ஒருவகையில் நல்லதையே உண்டாக்குகிறது. ஆனால், அந்த அலக்ஷ்ய புத்தி அதிகமாகப் போகக் கூடாது. அது தப்பு.

திருவள்ளுவர் கொண்டுபோன சுவடியை அந்தச் சங்கப் பலகையில் வைக்கச் சொன்னார்கள். 'இந்தச் சுவடிக்குச் சங்கப் பலகை இடம் கொடுத்தால்தான் இதை இலக்கியத் தரமுள்ளது என்று ஒப்புக்கொள்ள முடியும்' என்று மற்ற புலவர்கள் சொல்லி விட்டார்கள். திருவள்ளுவரும் 'ஆகா, அப்படியே!' என்று அந்தச் சின்னச் சுவடியைப் பலகையில் வைத்தார். அது அந்தச் சுவடிக்கு மட்டும் இடம் கொடுத்து, மற்றவர்களையெல் லாம் கீழே தள்ளிவிட்டது!

அப்போது ஏனைய புலவர்கள் எல்லோரும் குறளின் பெருமையை உணர்ந்து, ஒவ்வொருவரும் ஒவ்வொரு செய் யுளால் புகழ்ந்தார்கள். அவர்களுக்குள்ளே ஒருவர்,

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால் – ஆரியம்
வேத முடைத்து; தமிழ்திரு வள்ளுவனார்
ஓதுகுறட் பாவு டைத்து

(திருவள்ளுவ மாலை)

என்று சொல்லியிருக்கிறார். 'ஸம்ஸ்கிருதம் பெரியதா, தமிழ் பெரியதா என்று கேட்டால், ஸம்ஸ்கிருதம்தான் என்று நேற்று வரையிலும் சொல்லியிருக்கலாம். இன்றிலிருந்து அப்படிச் சொல்லக் கூடாது. ஸம்ஸ்கிருதத்துக்கு உயர்வு அதில் வேதம் இருக்கிறது என்பதே. அதற்குச் சமானமாகத் தமிழில் இன்றைக் குக் குறள் வந்துவிட்டதே! அது எப்படி உயர்வு உடையதா கும்?' என்று அவர் சொல்கிறார். இதனால் குறளானது வேத சமானம் என்பது தாத்பரியம். வேதத்தால்தான் ஸம்ஸ்கிருதத் துக்கே பெருமை, வேதம் எந்தப் பாஷையில் இருக்கிறதோ அந்தப் பாஷைதான் எல்லாவற்றிலும் உயர்ந்தது என்ற கருத்துகளும் இங்கே வெளிப்படுகின்றன.

தேவாரமும் திருவாசகமும் தமிழ் வேதம் என்பது சைவர்க ளுக்குப் பிரசித்தம்.

இவை நம் மதத்துக்குள் அகப்பட்டவை.

கிறிஸ்தவர்கள் பைபிள் புஸ்தகம் கொண்டு வந்தார்கள். அதற்கும் 'சத்திய வேதம்' என்று பெயரிட்டார்கள்.

இப்படி உலகத்திலிருக்கும் வியவஹாரத்தைப் பார்த்தால் வேதத்துக்கு ஒரு தனி கௌரவம் இருக்கிறது. ஒரு பிரகாசமான கிரந்தத்தால் மற்றவற்றை வியவஹரிப்பது பிரசித்தமான உலக வழக்கம் என்றால், நம் புஸ்தகங்களிலெல்லாம் இப்படிப் பட்ட முதன்மை ஸ்தானம் வகிப்பது வேதமாகவே இருக்கிறது.

இப்படிக் காலம் சொல்ல முடியாமல் நம் தேசம் முழுவதி லும் உரைத்து உரைத்து நம்முடைய மகத்தான கலாசாரத்துக்கு ஜீவ ஸத்தாக ஊறிப்போயிருக்கிற வேத நிதியை, நம்முடைய அஜாக்கிரதையால் 'இனிமேல் இல்லை' என்று ஆகும்படி யாகச் செய்துவிடக் கூடாது. இந்துவாகப் பிறந்த ஒவ்வொருத் தருக்கும் இதைவிடப் பெரிய பொறுப்பு எதுவும் இல்லை!

வேத சப்தம் பிரகாசிக்க வேண்டும்; வேத அர்த்தம் பிரசார மாக வேண்டும்; வைதிக அனுஷ்டானங்கள் புது ஜீவனைப் பெற்றுத் திகழ வேண்டும். நம்முடைய ஒரு தேசத்திலே இப்படி ஏற்பட்டு விட்டால் போதும். ஒருத்தனுடைய ஹ்ருதயம் பலமாக இருந்து விட்டால் மற்ற அவயவங்களுக்கு எத்தனை வியாதி வந்தாலும் அவன் பிழைத்துக் கொள்கிற மாதிரி, லோகத்திலுள்ள அத்தனை தேசங்களுமே நல்ல வழிக்கு வந்து, ஸமஸ்த ஜனங்களும் க்ஷேமமாக இருப்பார்கள். வேத தர்மம் பிரார்த்தனை பண்ணுவதும் இதைத்தான்.

*லோகா: ஸமஸ்தா: ஸுகிநோ பவந்து!*
*வையகமும் துயர் தீர்கவே!*



## ஷடங்கங்கள்

இந்து மதத்தின் ஆதாரப் புஸ்தகங்களில், வேதத்துக்கு அடுத்தபடியாக வருவது வேதத்தின் ஆறு அங்கங்கள்.

வேதத்தை ஒரு மூர்த்தியாகச் சொல்லும்போது அந்த வேத

புருஷனுக்குப் பல அங்கங்கள் இருக்கின்றன. வாய், மூக்கு, கண், காது, கை, பாதம் என்ற ஆறு அங்கங்கள் இருக்கின்றன. இவற்றை 'ஷட் (ஆறு) அங்கம்', 'ஷடங்கம்' என்று சொல்வார் கள். சடங்கு என்று சொல்வது அந்த வார்த்தையிலிருந்து மருவி வந்ததுதான்.

'வேதமோ(டு) ஆறு அங்கம் ஆயினான்' தேவாரம் சொல் லும் ஆறு அங்கம் ஷடங்கமே!

பழைய காலத்தில் தர்மசாஸனங்களெல்லாம் கோயில் சுவர் களில் கல்லில் வெட்டப்பட்டிருக்கின்றன. தர்மங்களைப் பதிவு செய்யும் ஸப் ரிஜிஸ்திரார் ஆபீஸ் பழைய நாளில் கோயில் தான்! திருவாங்கூர் சமஸ்தானத்து ராஜ்யாதிகாரிகளுள் திருமந் திர ஒலை என்பவன் ஓர் உத்தியோகஸ்தன். சமீபகாலம் வரை யில் அந்த ராஜ்யத்தில் இந்த உத்யோகம் இருந்தது. பூர்வத்தில் தமிழ்நாட்டில் எல்லா அரசர்களிடமும் இப்படியொரு அதிகாரி இருந்தான். இந்தக் காலத்தில் 'பிரைவேட் செகரட் டரி' என்று சொல்கிறார்களே, அந்த மாதிரி. அவன் அரசன் எது சொன்னாலும் அதை ஒலையில் எழுதிக் கொள்ள வேண் டும். பின்பு அதை யார் யாருக்கு அனுப்ப வேண்டுமோ அவர் களுக்கு அனுப்ப வேண்டும். அந்தக் காலத்தில் யார் எந்தத் தர்மம் பண்ணினாலும், அதை மகாராஜாவுக்குத் தெரிவிக்க வேண்டும். அவன் அதை ஒப்புக் கொண்டு ஆக்ஞை பண்ணு வான். அந்த ஆக்ஞையைத் திருமந்திர ஒலைக்காரன் எழுதி அனுப்புவான். அப்படி எழுதிக் கடைசியில், 'கல்லிலும் செம்பி லும் வெட்டிக் கொள்வதாகவும்' என்று முடிப்பான். அந்த ஆக்ஞை எந்த ஊரில் தர்மம் செய்யப்படுகிறதோ அந்த ஊர் சபையாருக்கு அனுப்பப்படும். அவர்கள் அதைக் கோயில் சுவரில் வெட்டச் செய்வார்கள். இதுதான் 'கல்லில் வெட்டிக் கொள்வது' என்பது. அனேகக் கோயில்களிலுள்ள சிலாசாஸ னங்கள் இவைதான்!

'செம்பில் வெட்டிக் கொள்வது' என்பது தாமிர சாஸன மாகச் செப்பேடுகளில் எழுதி, ஓர் ஏட்டுக்கு மேல் போனால் ஓட்டை பண்ணி வளையம் போட்டுக் கோத்து வைப்பதாகும். இதற்கும் உள்ளூர் சபையார் அங்கீகாரம் கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட செப்பேடுகளும் கோயில்களிலேயே பாதுகாப்

பாகப் பூமிக்கு அடியிலுள்ள 'க்ஷேமம்' என்கிற (க்ஷேமம் என்றால் பாதுகாப்பு என்றுதானே அர்த்தம்?) இடத்தில் வைக்கப்படும். தேச வாழ்வே ஈஸ்வரன் கையில் ஒப்பிக்கப்பட்டு, ஆலயம் என்பதே ஒரு நாட்டின் உயர்நிலையாகக் கருதப்பட்டு வந்ததால், இப்படி அதுவே ரிஜிஸ்திரார் ஆபீஸ், எபிக்ராஃபி ஆபீஸ் எல்லாமாக இருந்தது. அந்த விஷயம் இருக்கட்டும்.

ஊர்தோறும் இருந்த சபை விஷயத்துக்கு வருகிறேன்.

ஒவ்வொரு ஊரிலும் பிராமணர்கள் அங்கம் வகிப்பதாக இந்த 'சபை' என்பது இருந்தது. அதில் வேதமும் மந்திரப் பிராம்மணமும் தெரிந்தவன் அங்கத்தினனாகலாம். அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைகள் உண்டு. இன்னார் இன்னார்தாம் அந்தச் சபைக்கு அங்கத்தினராகலாமென்ற விதி உண்டு. இன்ன இன்ன குற்றம் செய்தவர்களும் அவர்களுடைய பந்துக்களும் சபைக்கு அங்கத்தினர் ஆகக் கூடாது என்ற நியதியும் உண்டு. அங்கத்தினராவதற்குப் போட்டி போடும் ஒவ்வொருவர் பெயரையும் ஓலையில் எழுதிக் குடத்தில் போட்டு ஒரு குழந்தையைக் கொண்டு எடுக்கச் சொல்லுவது வழக்கம். அப்படி எடுத்த ஓலையில் உள்ள பெயருடையவர் சபைக்கு அங்கத்தினராவார். உத்திரமேரூர் என்னும் ஊரில் உள்ள சிலாசாஸனத்தில் இந்த விஷயங்கள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

அந்தச் சபையினருக்குள் பல பிரிவுகள் உண்டு. நீருக்காக ஒரு பிரிவு, வரி போட ஒரு பிரிவு முதலிய பல பிரிவுகள் உண்டு. தர்மத்துக்கு நிலம் கொடுத்தாலும், பணம் கொடுத்தாலும், மாடு ஆடுகளைக் கோயில்களுக்கு விட்டாலும், தீபம் போடுவதற்காக ஏற்பாடு செய்தாலும் இப்படி எதுவானாலும் அந்தச் சபையினர் மூலமாக விட வேண்டும். அவர்கள் அதை அங்கீகரிப்பார்கள். அந்தத் தர்மசாஸனத்தில் 'இங்ஙனம் சபையோம்' என்று அவர்கள் கையெழுத்துப் போடுவார்கள். அப்படி உள்ள கையெழுத்துகளால் பல அங்கத்தினருடைய பெயர்கள் இப்போது தெரிய வருகின்றன. அவற்றிலிருந்து 'ஷட்கர்மநிரதன்' என்றும், 'சடங்கவி' என்றும் பிராமணர்களுக்குப் பட்டம் கொடுக்கப்பட்டிருந்தது தெரிய வருகிறது. 'சடங்கவி' என்பது 'ஷடங்கவித்' என்பதன் சிதைவாகும்.

ஷட்+அங்கம்+வித் – அதாவது 'ஆறு அங்கங்களை அறிந்த வன்' என்பது அதன் அர்த்தம். அந்தப் பிராமணர்கள் ஆறு அங்கங்களையும் அறிந்தவர்கள் என்று தெரிய வருகிறது. இப்படி நம் நாட்டின் சின்னச் சின்ன ஊர்களில்கூட எத்தனை ஷடங்கவித்துகள் இருந்திருக்கிறார்கள் என்று பழைய சாஸனங் களிலிருந்து தெரிகிறது. இவர்கள் முக்கியமாக வைதிகக் கர்மானுஷ்டானம் செய்தவர்கள்தானே? இதனால்தான் வைதிகக் கர்மாக்களுக்கே 'சடங்கு' என்ற சொல்லும் வந்தது. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்குப் பெண் கொடுக்க வந்தவருக்கு 'சடங்கவி சிவாசாரியார்' என்றே பெயர் சொல்லியிருக்கிறது.

ஆறு அங்கங்களாவன: சிக்ஷை (எழுத்திலக்கணம்), வியாகர ணம் (சொல்லிலக்கணம்), நிருக்தம் (நிகண்டு), கல்பம் (கர்மா னுஷ்டான முறை), சந்தஸ் (பாவிலக்கணம்), ஜ்யோதிஷம் (சோதிடம்) என்பவை. பிராமணன் வேதங்களையும் இந்த ஆறு அங்கங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும். முதலில் வேதாத்யயனம் செய்ய வேண்டும். அந்த வேதத்துக்கு அர்த் தம் தெரிந்து கொள்ளும் பொருட்டு, இந்த ஆறு அங்கங்களை யும் தெரிந்து கொள்ள வேண்டும்.

வேத புருஷனுக்கு சிக்ஷை மூக்கு; வியாகரணம் முகம், அதா வது வாய் (வியாகரணப்படி ஒன்றைச் சொல்ல முடியாவிட் டால் உளற வேண்டும்); கல்பம் கை; நிருக்தம் காது; சந்தஸ் பாதம்; ஜ்யோதிஷம் கண். ஜோஸ்யம் என்பது ஜ்யோதிஷத் தையே குறிக்கும்.

ஏன் இப்படி ஒவ்வொரு சாஸ்திரத்தை ஒவ்வொரு அவயவ மாகச் சொல்லியிருக்கிறது என்பதை அந்தந்தச் சாஸ்திரத்தைப் பற்றிச் சொல்லும்போது பார்க்கலாம்! பொருத்தமாகத்தான் இப்படி வைத்திருக்கிறார்கள் என்று தெரியும்.

முதலில் 'சிக்ஷை'யில் ஆரம்பிக்கலாம்.



# மூச்சு அவயவம்

சிக்ஷை என்பது வேதத்தின் ஆறு அங்கங்களில் பிரதம அங்கம். வேதத்துக்கு நாசி (மூக்கு) ஸ்தானம் சிக்ஷை. மூக்கு என்பதால் முகர்ந்து பார்க்கிற சின்ன உபயோகத்துக்காக ஏற்பட்டது என்று (அர்த்தம்) இல்லை. மூக்கினால்தானே மூச்சு விடுகிறோம்? நமக்குப் பிராணாதாரமான சுவாசத்தை விடுவதற்கு நாசி உதவுகிறாற்போல், வேத மந்திரங்களுக்கு உயிர் மூச்சாக இருக்கிற அங்கம் சிக்ஷை.

வேத மந்திரங்களுக்கு உயிர் எதில் இருக்கிறது? மந்திரங்களின் ஒவ்வொரு எழுத்தையும், அதன் பரிமாணம் எப்படியிருக்க வேண்டுமோ அப்படிச் சரியாக உச்சரிக்க வேண்டும். 'அக்ஷர சுத்தம்' என்று இதற்குப் பெயர். அதோடுகூட ஒவ்வொரு எழுத்தையும் உயர்த்திச் சொல்வதா, தாழ்த்திச் சொல்வதா, சமனாகச் சொல்வதா என்ற பாகுபாடும் உண்டு. இந்த மூன்றையும் முறையே உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் என்று சொல்வார்கள். இவை இருக்க வேண்டியபடி இருந்தால் அதற்கே 'ஸ்வர சுத்தம்' என்று பெயர். இப்படியாக அக்ஷர சுத்தம், ஸ்வர சுத்தம் இரண்டும் இருந்தால்தான் மந்திரங்கள் பலன் தரும். மந்திரங்களில் அர்த்தத்தைவிடக்கூட இம்மாதிரி அவற்றின் ஒலி சரியாக இருக்க வேண்டியதுதான் முக்கியம். அர்த்தம் தெரியாவிட்டாலும்கூட, மந்திரங்களின் சப்த ரூபத்தை உள்ளபடி உச்சரித்து விட்டால் அவை பலன் தந்து விடும். ஆகையால், மந்திர ஸமூஹமாகவே இருக்கப்பட்ட வேதத்துக்கு எது மூச்சு ஸ்தானம் என்றால் சப்த ரூபம்தான்!

தேள்கொட்டு மந்திரம் இருக்கிறது. அதற்கு அர்த்தம் சொலக் கூடாது. அதில் உள்ள எழுத்துகளுக்குத்தான் யோக்கியதை உண்டு. சில வகையான சப்தங்களுக்குச் சில சக்தி உண்டு. திவஸ மந்திரங்களை ஸம்ஸ்கிருதத்திலே ஏன் சொல்ல வேண்

டும்? இங்கிலீஷிலாவது தமிழிலாவது சொன்னால் என்ன? அப்பொழுது சப்தம் வேறாய் விடுகிறது. அந்தச் சப்தம்தான் பிரதானம். பில்லி சூனியம் வைக்கிறவர்களுடைய பல்லைத் தட்டிவிட்டால் அவர்கள் செய்கிறது பலிக்காது. ஏனென்றால் பல் போன பின்பு உச்சாரணத்தில் தப்பு ஏற்படும். உச்சாரணம் வேதத்துக்குப் பிரதானம். அது சரியாக இருக்க என்ன செய் வது? அக்ஷரத்தை இப்படி இப்படி ஒலிக்க வேண்டுமென்று நன்றாக வரையறுத்து லக்ஷணம் சொல்ல வேண்டும்.

இப்படி அக்ஷர லக்ஷணத்தைச் சொல்வதுதான் சிக்ஷை என்பது. வேதாக்ஷரங்களின் லக்ஷணத்தை வரையறை செய்து கொடுப்பதே சிக்ஷா சாஸ்திரம்.

ஒரு பாஷையில் இப்படியிப்படி உச்சரிக்க வேண்டும் (Pronounce பண்ண வேண்டும்) என்று முறைப்படுத்துகிறதை Phonetics என்கிறார்கள். மற்ற பாஷைகளைவிட வேத பாஷைக்கு இந்த ஃபோனடிக்ஸ் ரொம்பவும் முக்கியம். ஏனென்றால் உச்சரிப்பு மாறினால் பலனே மாறிவிடுகிறதை அந்தப் பாஷையிலேயே பார்க்கிறோம்.

இப்படிப்பட்ட Vedic Phonetics-ஆக இருப்பதால்தான் சிக்ஷா சாஸ்திரத்தை வேத புருஷனின் ஆறு அங்கங்களில் முதலாவதாக வைத்துள்ளார்கள். தமிழில் அதை 'எழுத்திலக்க ணம்' என்று சொல்லலாம்.

சிக்ஷையைப் பற்றி வேதமுடியான உபநிஷத்திலேயே சொல்லியிருக்கிறது. தைத்திரீய உபநிஷத்து 'சீக்ஷாவல்லி' என் பதிலேயே ஆரம்பிக்கிறது. அதன் முதல் மந்திரம் 'சீக்ஷா சாஸ்திரத்தை இப்போது வியாக்யானம் பண்ணுவோமாக, அதாவது விளக்குவோமாக!' என்று ஆரம்பிக்கிறது.

இங்கேயும் சரி, மற்றும் அனேக வேத நூல்களிலும் சரி, 'சிக்ஷா' என்பதை நீட்டி 'சீக்ஷா' என்றே சொல்லியிருக்கும். ஆசார்யாள் (ஆதிசங்கரர்) தம்முடைய பாஷ்யத்திலே 'தைர்க் யம் சாந்தஸம்' என்கிறார். தைர்க்யம் என்றால் தீர்க்கமாக ஆவது. அதாவது, குறிலாக இருக்க வேண்டிய 'சி' நெடிலாக 'சீ' என்று ஆவது. தமிழில்கூடச் செய்யுள்களில் 'நிழல்'

என்பதை நீட்டி 'நீழல், திருவடி நீழல்' என்கிறோம். வேத பாஷைக்கு ஸம்ஸ்கிருதம் என்று பேர் இல்லை என்றும், அதற்குச் சந்தஸ் என்றே பேர் என்றும் முன்பே சொன்னேனல்லவா? 'சாந்தஸம்' என்பது அப்படிப்பட்ட சந்தஸ் பாஷையை, அதாவது வேதத்துக்கேயான விசேஷப் பிரயோகத்தைச் சொல்வது!

அடுத்த புத்தகத்தில்...
வேதம் என்கிற தலைப்பின் கீழ்க் கட்டுரைகள் தொடர்கின்றன.



சிக்கல் ஸ்ரீ சிங்கார வடிவேலன் ஆலயத்தின் தோற்றம்...